# 7. பூவுக்குக் கீழே

நகரம் ஒரு திசையில் முடிகின்ற இடத்திற்குச் சற்றுத் தள்ளி வந்ததும் சைக்கிளை விட்டு இறங்கினான். ஒரு மரத்தடியில் சைக்கிளை நிறுத்திப் பூட்டிவிட்டுக் கையில் பையோடு சாலை ஓரமாக நடந்தான். முதல்நாள் திருச்சிக்குப் பஸ்ஸில் போகும்போது இந்த இடத்தில்தான் அந்தப் பூவைப் பார்த்திருந்தான். மேலே சிவப்பு கீழே மஞ்சள். ஒரே பூவில் இரண்டு நிறங்கள் சம பரிமாணத்தில் வேகமாய்ப் பறந்த பஸ்ஸில் அந்தப் பூவை ஒரு வினாடிக்கும் குறைவான நேரத்தில்தான் பார்க்க முடிந்தது. பூ இன்னும் கண்ணிற்குள் அப்படியே நின்றது. இடத்தை அப்போதே அடையாளமிட்டு மனத்தில் வைத்துக்கொண்டான்.

வலது ஓரமாய்ப் பாறை தெரிந்தது. பாறைக்குப் பத்தடி தூரத்தில் போத்துப் போத்தாய்ப் புதர்கள் மண்டிய இடம் ஒன்றில்தான் பூவைப் பார்த்த ஞாபகம். பாறையை நோக்கி நடந்தான். சாலைக்கு இரு புறங்களிலும் வெளிர் பச்சை நிறத்தில் கடலைச் செடிகள் கொடி விட்டிருந்தன. அடர்ந்து படர்ந்து பரந்த கடலாய்க் கிடந்தன கடலைச் செடிகள். ஒரு தரம் இவன் பக்கமாய்க் காற்றுக்குச் சரிந்து வளைந்தன கொடிகள். மறுதரம் கொஞ்சம் சாய்ந்து காற்றடித்தபோது திரும்பி வளைந்து கொடிமேல் கொடி சாய்ந்து திசை மாறி ஆடின. செடிகளுக்கும் கொடிகளுக்கும் காற்றுத்தான் கேப்டன் என்று நினைப்பு வந்தது. பாறையைத் தாண்டி நடந்தபோது ஆவல் பறந்தது. பத்தடிக்கு அப்பால் நடந்ததும் பூ கண்ணில் படவில்லை. இவனுக்குக் கொஞ்சம் பதட்டம் வந்தது. வரும்போதே சரியாகப் பார்க்கவில்லையோ என்று சந்தேகம். பார்வை கூர்மையில்லாமல் தனக்கு அகலப் பார்வையாயிருக்கிறதென்று எண்ணி வருத்தப்பட்டான். கணக்கில் இவன் சுரத்தில்லாதவன். கணக்கில் கெட்டிக்காரர்கள் இப்படி எதையாவது தேடும்போது தன்னைப்போல் ஏமாற மாட்டார்கள்; குறியாய்ப் பார்த்து விடுவார்கள் என்று எண்ணினான். பார்வையை வலிய கூர்மைப்படுத்திக்கொண்டு மேலும் நடந்தான்.

ஒரு புதர் முனையில் பளீரென்று அந்தப்பூ தெரிந்தது. இவனுக்குக் கை வேர்த்துவிட்டது. கண்கள் லேசாய் நடுங்கின. சாலையை விட்டுப் பள்ளத்தில் இறங்கினான். காட்டுச் செடிகள் அடங்காமல் வளர்ந்திருந்தன. புதருக்குள் நின்று பார்த்தான், ஓரத்தில் ஒதுங்கி நின்று பார்த்தான், தொட்டான். பூ மிது மிதுவென்றிருந்தது. நெஞ்சு தனியாய்ப் பறப்பது போலிருந்தது. தன்னை யாராவது பார்க்கிறார்களாவென்று சுற்றிப் பார்த்தான். சாலையும் புளிய மரங்களும் கடலைக்காடும் அனாமத்தாய்க் கிடந்தன.

பூவுக்குக் கீழ் செடியைப் பார்த்தான். அகலமாய் குட்டையாய் கத்திரிவெட்டில் இலைகள். குத்துச் செடி அளவிற்கு உயரம். பூக்காத காலத்தில் செடியும் அழகாயிருக்கும். அதே போன்ற செடியை அங்கும் இங்கும் தேடினான். கொஞ்சம் தள்ளி சின்னதாய் ஒரு செடி நீர்முள்ளிக் கொத்திற்குப் பக்கத்தில் இருந்தது. வாளிப்பான செடி. இரண்டு நாள் மழையில் பூமி நனைந்து ஈரமாயிருந்தது. அருகில் போய்ப் பதமாய் அந்தச் சிறு செடியைப் பிடுங்கினான். செடியைப் பிடுங்கிய இடத்திலிருந்து ஈரமண்ணை அள்ளிப் பாதிப் பைக்கு நிரப்பிக் கொண்டான். பிடுங்கிய செடியைப் பைக்குள் போட்டான். பூத்த செடியையும் பூவையும் ஒருமுறை நன்றாகப் பார்த்துவிட்டு சாலைக்கு ஏறினான். ரொம்பக் குதூகலமாயிருக்கும்போது பாடும் பாட்டை அவன் உதடுகள் பாடியது அவனுக்குத் தெரியவில்லை.

சைக்கிளில் வீட்டிற்கு வரும்போது இருட்டத் தொடங்கிவிட்டது. பையிலிருந்து செடியை வெளியிலெடுத்ததும் மனைவி கேலி பேசினாள். "அடுத்த விருந்தாளி வந்தாச்சாக்கும்?" பேண்ட்டையும் சட்டையையும் களைந்துவிட்டு லுங்கியைக் கட்டிக்கொண்டான். பாத்ரூமுக்குப் பக்கத்தில் கிடந்த மண்வெட்டியை எடுத்துக்கொண்டு வாசலுக்கு வந்தான். விதவிதமாய் வளர்ந்த செடிகளுக்கு மத்தியில் புதிய நபருக்கேற்ற இடத்தைத் தேடினான். காம்பவுண்டு உள்சுவருக்குச் சற்றுத்தள்ளி வாசலுக்கு நேராய்க் கொஞ்ச இடம் இருந்தது.

மண்வெட்டியால் குழி வெட்டினான். வெளியில் போய்க் கொஞ்சம் மணல் கொண்டு வந்தான். குழிக்குள் மணலைப் பரப்பினான். அதன் மேல் தோண்டிய மண்ணில் கொஞ்சத்தைச் சிதறினான். மேலாகச் செடியைப் பிடுங்கிய இடத்தில் தோண்டிய மண்ணைப் பையிலிருந்து கொட்டினான்.

செடியைப் பதமாகக் குழியில் வைத்தான். வேர் மடிந்து விடாமல் நிறுத்தி, கட்டிக் கல் இல்லாமல் மண்ணை அள்ளி மெது

மெதுவாய்ப் போட்டான். மீதியுள்ள மண்ணைச் செடிக்கு வட்டமாக உயர்த்தி அரண் கட்டினான். ஈர மண் எல்லா வேலைகளுக்கும் ரொம்பத் தோதாயிருந்தது. பூவாளியில் தண்ணீர் கொண்டு வந்து செடியின் தலை இலையிலிருந்து கீழ் இலைவரை குளிரக் குளிர ஊற்றினான். தண்ணீர் ஊற்றியதில் செடி கொஞ்சம் சாய்ந்ததைச் சரிப்படுத்தினான். பூவாளியைப் பக்கத்தில் வைத்துவிட்டு வெகு நேரம் அந்தச் செடியையே பார்த்துக்கொண்டிருந்தான். மனைவி உள்ளே குழந்தைக்குப் பாடம் சொல்லிக்கொண்டிருந்தாள். தொந்தரவில்லை. இன்னும் வெகு நேரம் பார்த்துக்கொண்டிருக்கலாம். பொழுதுதான் நன்றாக இருட்டி விட்டது. உள்ளே போனான்.

ஆபீஸ் சிநேகிதன் சீனிவாசன் இவனைத் தேடிவந்தான். பேசினான். மனைவி என்னென்னவோ கேட்டாள். பதில் சொன்னான். குழந்தை காலைக் கட்டிக்கொண்டு சிரித்தது. இவனும் சிரித்தான். அரை மணி கழித்து வாசல் விளக்கைப் போட்டுவிட்டு வந்து செடியை ஊன்றிக் கவனித்துப் பார்த்துவிட்டுப் போனான்.

தேங்காயில்லை என்றாள். செடியைப் பார்த்துக்கொண்டே சைக்கிளை எடுத்துக்கொண்டு கடைக்குப் போனான். தேங்காய் வாங்கிக்கொண்டு திரும்பும்போது வேண்டுமென்றே செடியைப் பார்க்கவில்லை. திரும்பி வந்து ஆற அமரப் பார்க்க வேண்டுமென்று அடக்கிக்கொண்டான்.

சாப்பிடும்போது, "மத்தியானம் தெருவில் இந்த அப்பளத்தை வாங்கினேன். எப்படி இருக்கு?" என்றாள். "நல்லாயிருக்கு" என்றான். அவளும் போட்டுக்கொண்டு சாப்பிடும்போது, "ஐயய்யோ, அப்பளத்திலே மடி அடிக்குதே. நல்லா ஏமாத்திப்புட்டான், ஒங்களுக்கு நாக்கு செத்துப்போச்சா" என்றாள். விடு கழுதையை என்று சொல்லிக்கொண்டே கழுவிய கையை டவலில் அழுத்தி அழுத்தித் துடைத்தான். பாத்திரம் கழுவி முடியும் வரை தொந்தரவில்லை.

வாசல் விளக்கைப் போட்டான். வெளிச்சம் போதாதென்று பீரோவிலிருந்து டார்ச்சை எடுத்துக்கொண்டு செடியருகில் வந்தான். டார்ச் வெளிச்சத்தில் செடி மயங்கியது. அவன் கணக்குப் போட்டான். செடியை நட்டு மூன்று மணி நேரமாகிவிட்டது. செடி வாடவில்லை. ஆனால், காட்டில் பிடுங்கிய போதிருந்த செழிப்பில் கொஞ்சம் குறைவிருந்தது.

செடி இப்போது தரைக்கு மேல் ஒருசாண் உயரத்தில் தானிருந்தது. இவன் மறுபடி கணக்குப் போட்டான். இது குத்துச்

செடியாய் வளர எப்படியும் ஒரு மாதமாகலாம். அப்புறம்தான் பூக்கும். மஞ்சளும் சிவப்பும் சமபரிமாணத்தில் ஒரு சின்னப் பேழையைப் போல் கண்ணை அசத்தும். இந்தச் செடி பூக்கின்ற தினத்தில் இவள் வாசலுக்குக் கோலம் போட வேண்டியதில்லை. இந்த வீடும் வாசலும் தெருவும் ஒரு சின்ன அதிசயத்தைப் பார்க்கும். பூ பத்து நாட்களுக்கு வாடாது. அந்த இரவுகளிலும் பகல்களிலும் இந்தப் பூவிற்காக எந்தெந்த காட்டிலிருந்து என்னென்ன வண்டுகள் வருமோ?

"மணி பத்தாச்சு" உள்ளே இருந்து குரல் வந்தது. கைலியை மடித்துக்கொண்டு உள்ளே போனான்.

இவன் உலகம் பூராவையும் சுற்றி வரவேண்டுமென்று அடிக்கடி நினைப்பான். உலகத் தெருக்களிலும் பூங்காக்களிலும் காடுகளிலும் வேர்விட்டுக் கிளைவிட்டுப் பூத்துக் சொரியும் எல்லா மரங்களையும் செடிகளையும் பார்த்துத் தீர்த்து விட வேண்டுமென்று கனவு கண்டு கொண்டேயிருந்தான். இங்கிலீஷ் சினிமாக்கள் பார்க்கும்போது காமிரா வீட்டைவிட்டு ஸ்டுடியோவை விட்டு எப்போது சாலைகளுக்கு, ஆற்றங்கரைகளுக்கு வரும் என்று கையைப் பிசைந்துகொண்டு உட்கார்ந்திருப்பான். இங்கேயெல்லாம் பார்க்க முடியாத செடிகளையும் மரங்களையும் பூக்களையும் பார்க்கத்தான்.

சின்ன வயதில் எல்லாப் பையன்களையும் போல் இவனும் பாடப் புத்தகங்களை எடுத்துக்கொண்டு மனப்பாடம் பண்ணவென்று ஏரிக்கரை, காடு, மரத்தடி என்று போயிருக்கிறான். அப்படியான ஒரு நாளிலாவது ஒரு வரியும் படித்ததில்லை. விரித்த புத்தகத்தை மூடிவிட்டு மரத்தையே பார்ப்பான்; செடிகளையே பார்ப்பான். காட்டு வாசனையில் சொக்கிப்போய் கனவு காண்பான்.

ஒரு நாள் உக்கிரமாய் வெயிலடித்துக் கொண்டிருந்த உச்சி வேளை. கையில் பாடப்புத்தகம். மரத்தடியில் குளு குளுவென்ற நிழலில் உட்கார்ந்திருந்தவனுக்குத் திடீரென்று அந்த மரம் பரிதாபமாய்த் தெரிந்தது. இவ்வளவு வெயிலையும் தலையில் வாங்கிக்கொண்டு ஏமாளித்தனமாய் எனக்கு நிழலைக் கொடுக்கிறதே என்று எண்ணினான். அப்புறம் மலரும் இவனுக்குப் பதில் சொல்வதாய் நினைத்துத் தானே சொல்லிக்கொண்டான்.

நான் ஒன்றும் ஏமாளியல்ல. இப்போதுதான் சூரிய ஒளியை வாங்கி ஒளிச்சேர்க்கை செய்கிறேன். சுறுசுறுப்பாய் உணவு

தயாரிக்கிறேன். நான் வேண்டாமென்று கீழே விட்ட நிழலில் நீதான் சோம்பேறித்தனமாய் விழுந்து கிடக்கிறாய்.

இப்படி அவனும் மரமும், அவனும் செடிகளும் பரீட்சைக்கு படிக்க வேண்டிய அவசரமான நேரங்களில் அதிக நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

புராணக் கதைகளை நிறையப் படிப்பான். அவற்றில் வருகிற தபோவனம், பர்ணசாலை இதிலெல்லாம் இவனுக்கு ரொம்ப மயக்கம். கல்லூரியில் படிக்கும்போது மூன்றாம் வீட்டு நீரஜாவை அவளுக்குத் தெரிந்து விடாமல் வெகு நாளாய்க் காதலித்தான். நீரஜா இவனைப் பார்த்து எப்போது சிரித்தாலும் சரி, அடுத்த பத்தாவது நிமிஷம் சைக்கிளில் ஏறி ஒரு தோப்பிற்குள் போய் உட்கார்ந்து கொள்வான். தன்னை ஒரு ரிஷியாக்குவான். நீரஜாவை ரிஷி பத்தினியாக்குவான். ஒரு அடர்ந்த கானகத்தை உண்டாக்குவான். ஜிலுஜிலுவென்று ஒரு நதியை ஓடவிடுவான். நதிக்கரையில் சுத்தமாய் ஒரு பர்ணசாலையைக் கட்டுவான். வீட்டில் தொங்கிய ரவிவர்மா ஓவியங்களில் வருவதுபோல் நீரஜா நீராடிவிட்டு குடத்தில் நீர் மொண்டு வருவதைப் பார்ப்பான். நீரஜாவிற்காகக் காடெங்கும் போய் காய்கள், கனிகள், கிழங்குகள் பறித்து வருவான். இப்படியே நினைத்துக் கிறங்கிக் கிடந்து வீடு சேர்ந்திருக்கிறான். அவள் ஒரு இஞ்சினியருக்கு மனைவியாகிப் பம்பாய் போனதும்தான் அந்தக் காடும் பர்ணசாலையும், கனவும் நின்றது.

பக்கத்துக் கிராமத்தில் அப்பாவின் நண்பர் ஒரு முஸ்லீம். அவர்கள் வீட்டுக் கல்யாணத்திற்குப் போகையில் அப்பா இவனையும் அழைத்துக்கொண்டு போனார். ட்ரவுசர் போட்ட சின்னப் பையன், கல்யாணம் ராத்திரியில்; விடிய விடிய சாப்பாடு. விடிய விடிய சினிமாப்பாட்டு. விடிய விடிய ஊர்வலம், சடங்குகள், மல்லிகைப்பூ மலேயா செண்ட் வாசனை ஊர் முழுவதும்.

வீட்டு வாசலில் ஒரு வேப்பமரம். ஒரு முருங்கை மரம். ஒவ்வொரு மரத்திற்குப் பக்கத்திலும் ஒரு மூங்கிற் கம்பத்தை நட்டு ஒவ்வொரு பெட்ரோமாக்ஸ் லைட்டைக் கட்டி யிருந்தார்கள். பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் வேப்ப இலைகளும் முருங்கை இலைகளும் கண்ணில் பால் ஊற்றிக்கொண்டிருந்தன. திண்ணையில் உட்கார்ந்து விடிய விடிய அந்த அதிசயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். கண்கொள்ளாக் காட்சியென்றால் அது பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்திலாடும் வேப்பங்கிளைகளும் முருங்கை இலைகளும்தான் என்று இப்போதும் நினைத்துக்கொண்டிருக்கிறான்.

இவனும் பி.எஸ்.ஸி பாட்டனியில் சீட் கிடைத்தபோது வேண்டாமென்று பி.ஏ. வரலாறு எடுத்துப் படித்தான். அப்பாவுக்கு அதனால் இவன் மீது ஏகக் கோபம். இலைகளை வெட்டுவதும் பாடம் பண்ணுவதும் சகிக்க முடியாதவைகளாகத் தோன்றின. எம்.ஏ.விலும் வரலாறையே எடுத்துப் படித்தான்.

எங்காவது நாலைந்து மரங்களும் செடிகளும் அடர்ந்து இருளாயிருக்கும் இடம் தெரிந்தால் மனசு துள்ளிப் பாயும். உள்ளே நுழைந்து சருகுகளை ஒதுக்குவான். பாம்பு பல்லிக்குப் பயப்படும் குணம் சிறு வயதிலிருந்தே இல்லை. அங்கே போய் உட்கார்ந்து கொண்டு ராஜாக்கள் காலம் மூதாதையர் காலம் சிம்பன்ஸி காலத்திற்கெல்லாம் போய் வருவான்.

மரங்கள் செடிகள் எதுவும் காற்றைத் தவிர வேறு கழிவுப் பொருள்களை வெளியிடுவதில்லை. மனிதர்களும் மிருகங்களும் இதில் அதிகமாக வாழ்கிறார்கள் என்று அடிக்கடி நினைப்பான்.

வேலை கிடைக்காமல் திரிந்தபோதுதான் செடிகளைக் கொண்டுவந்து வாசலிலும் கொல்லையிலும் ஊன்றி வைக்க ஆரம்பித்தான். அப்பாவின் சிநேகிதர்கள் வீட்டிற்கு வரும்போது "பையன் வேலை தேடுறானா?" என்று கேட்கையில் அப்பா சொல்வார். "அவர் வேலை ஒண்ணுந் தேடுறதாக் காணோம். செடிகளைத் தேடிக்கிட்டுத் திரிகிறார்." ஒரு தடவை சிநேகிதனோடு ஊட்டிக்குப் போனான். அவ்வளவு செடிகளையும் பார்த்துவிட்டுக் கண்கள் தொட்டிலாடின. சொப்பனங்களில் வந்த பல செடிகள் ஊட்டியில் இருந்தன.

பங்களாக்களின் முன்னால் நூறு வகைச் செடிகள் மென்மையான நிறங்களில் முரட்டு நிறங்களில் பல வண்ணங்கள் ஒரே செடியில். கண்கள் அரை இஞ்ச் அகலமாகி விட்டன. பல பங்களா வாசல்களில் பிச்சைக்காரனைப்போல் நின்று செடிகளை யாசகம் கேட்டான். யாரும் தரவில்லை.

அப்புறம் அவன் எந்த பங்களா முன்பும் போய் நிற்கவில்லை. யாரும் கவனிக்காத காட்டுப் பக்கம் ரம்மியான பூக்களைப் பார்த்து அந்தச் செடிகளையும் காட்டுக் கொடிகளையும் கொண்டு வந்து வாசலில் வளர்க்க ஆரம்பித்தான். ஒவ்வொரு செடியிலும் ஒரு விநோதம், ஒரு விசேடமிருப்பதாகப் பட்டது. அவன் வீட்டு வாசலும் கொல்லையும் ரொம்பச் சின்ன இடங்கள். அவன் ஆசைப்படி தோட்டம் வளர்க்க உலகம் போன்ற ஒரு பெரிய இடம் தேவைப்பட்டது. கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டான்.

ஒருநாள் கள்ளிச் செடியைக் கொண்டு வந்து குழி வெட்டி மணல் பரப்பிச் செடியை ஊன்றித் தண்ணீர் ஊற்றிக்கொண்டிருந்த நேரம் அப்பா வந்துவிட்டார். "கள்ளியைக் கொண்டு வந்து வீட்டு வாசலில் நடலாமா! இதையெல்லாம் பைத்தியந்தான் செய்யும்" என்று சொல்லிக்கொண்டே பிடுங்கி வெகு தூரத்தில் கொண்டுபோய்ப் போட்டுவிட்டு வந்தார்.

மரங்களும் செடிகளும் தாயைப் போல. அப்பாவைப் போல அரக்கத்தனமான ஆண் இனமே தாவரங்களில் இல்லை. எல்லாம் பெண் இனம்; வாஞ்சை மிகுந்த இனம். அப்பா திவசம் முடிந்த மறுநாள் ஒரு அழகான கள்ளிச் செடியைக் கொண்டு வந்து வாசலில் நட்டான்.

பால்காரன் மணியடிக்கிற ஓசை தூக்க நடுவில் கேட்டது. அவள் எழுந்து போய்க் கதவைத் திறக்கும் ஓசையும் தொடர்ந்து கேட்டது. சுரீலென்று ஞாபகம் வந்து எழுந்தான். முகத்தைக் கழுவிக்கொண்டு வாசலுக்கு வந்தான். பொழுது விடிந்து கொண்டிருந்தது. காம்பவுண்டுக்கப்பால் லேசாய்ப் பனிமூட்டம்.

இவன் செடியருகில் போய்க் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தான். செடி வாடவில்லை. ரொம்பச் செழிப்பாகவும் இல்லை. அரணில் சிமெண்ட் பூசியது போல் ஈரமண் படிந்திருந்தது; நடுவில் ஒரு சின்னக் குழியுடன். உள்ளே போய்ப் பூ வாளியில் தண்ணீர் கொண்டுவந்து ஊற்றினான். மறுபடியும் குத்துக்கால் வைத்துக்கொண்டு செடியையே பார்த்துக்கொண்டிருந்தான்.

காப்பியை எடுத்துக்கொண்டு அவள் செடியருகில் வந்தாள். காப்பியை உறிஞ்சிக்கொண்டே செடியைப் பார்த்தான். தண்டை, குழியை, ஈரச் சொதசொதப்பை, இலைகளில் ஒட்டியும் ஒட்டாமலும் உருண்ட நீர்த் திவலைகளைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். வெகு நேரங்கழித்து பூ வாளியை எடுத்துக்கொண்டுபோய் நீர் எடுத்து மற்றச் செடிகளுக்கு ஊற்றினான்.

மார்க்கெட்டிற்குப் போகையில் ஒருமுறை, வரும்போது ஒருமுறை செடியைப் பார்த்தான். ஆபீஸுக்குக் கிளம்புகையில் நின்று நன்றாய்ப் பார்த்தான். இந்தச் செடிக்கு சோதனை நேரம் இனிமேல்தான். பகல் முழுவதும் அடிக்கப்போகிற வெயிலுக்குத் தாக்குப்பிடித்து விட்டால் பிழைத்துக் கொள்ளும். "மகளே, உன் சமத்து" என்று மனத்திற்குள் சொல்லிக்கொண்டான். குழந்தை டாட்டா சொல்லியபோது இவன் செடிக்கும் சேர்த்துச் சொல்லிவிட்டு ஆபீஸுக்குப் புறப்பட்டான்.

அன்று பகல் முழுதும் ஆபீஸ் வேலைகளைப் பார்த்துக்கொண்டிருந்த நேரங்களில் மனசு சலனப்பட்டுக்கொண்டே இருந்தது. கேண்டீனுக்குப் போக வெளியில் வந்தபோது வெயில் சுள்ளென்று அடித்தது. இன்றைக்கென்று வெயில் ரொம்ப அதிகமாக இருக்கின்றதென்று நினைத்தான். மீதிப்பட்ட வேலைகளைக் கட்டிப் போட்டுவிட்டு ஐந்தரை மணிக்கு சைக்கிளில் பறந்து போனான். செடி லேசாய் வாடியிருந்தது. ஆனால், பிழைத்துக் கொள்ளும் என்று தோன்றியது. பக்கத்தில் உட்கார்ந்து வெகு நேரம் பார்த்துக்கொண்டிருந்தான்.

மூன்றாம் நாள் வாட்டமெல்லாம் போய் மத மதவென்று தெரிந்தது செடி. இலைகளில் பச்சை பிடிக்க ஆரம்பித்திருந்தது. காலை மாலை இரவு என்று செடியருகில் உட்கார்ந்திருந்தான்.

ஒரு வாரங்கழித்து ஒருநாள் இவன் ஆபீஸிலிருந்து வரும் பொழுது இரண்டு வீடு தள்ளி ஒரு மாடு சாணிபோட்டு விட்டுப்போனது. கொஞ்சம் ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. என்றாலும் குனிந்து ஒரு கையில் சாணத்தை அள்ளிக்கொண்டு வந்தான். “தெருவில் எத்தனை பேர் பார்த்தார்களோ?” என்று மனைவி கத்திக் கோபித்தாள்.

சாணத்தைக் குழி நிறையப் போட்டுத் தண்ணீர் ஊற்றினான். பதினைந்து நாளில் செடி இவன் முழங்காலுக்கு வளர்ந்து விட்டது. தெருக்கோடியிலிருந்து ஒரு பையில் குப்பை அள்ளி வந்து செடிக்குக் கொட்டினான்.

ஒருநாள் சாமத்தில் திடீரென்று பேய் மழை பெய்தது. காற்று மாறி மாறி அடித்தது. மனைவி அவசரம் அவசரமாய் ஜன்னம் கதவுகளைச் சாத்தப் போனாள். இவன் வாசல் கதவைத் திறந்து கொண்டு வராந்தாவிற்கு வந்தான். டார்ச்சை அடித்துச் செடியைப் பார்த்தான். வளைந்து கொடுக்கவும் முடியாமல் நிமிர்ந்து நிற்கவும் முடியாமல் பரிதாபமாகத் தள்ளாடியது. உள்ளே ஓடி கடப்பாரையைத் தூக்கிக்கொண்டு வந்து செடிக்குச் சற்று தூரத்தில் ஊன்றினான். நனைந்துகொண்டே ஒரு கயிற்றால் கட்டி விட்டான். “பைத்தியம் பிடித்தது போதாதுன்னு ஜலதோஷமும் பிடிக்கப் போகுது” என்று அவள் திண்ணையில் நின்று கேலி பேசினாள்.

மறுநாள் காலையில் எழுந்து பார்த்தபோது செடி, படு உற்சாகமாய்த் தலையை ஆட்டிக்கொண்டு நின்றது. கடப்பாரையை உருவி எடுத்து உள்ளே போட்டான். காலைக் காப்பியைத் தினமும் செடியிடம் உட்கார்ந்துதான் குடித்தான். குப்பை, சாணத்தால்

பாதியும் இவன் பார்வையால் பாதியுமாய்ச் செடி வளர்ந்து இவன் தொடை உயரத்திற்கு வந்தது.

ஒருநாள் காலையில் வந்து உட்கார்ந்தபோது செடியில் சின்னதாய் என்னவோ மாற்றம் தெரிவது போலிருந்தது. உற்றுப்பார்த்தான். ஒரு மொட்டு, காப்பி அன்று ரொம்ப ருசியாயிருந்தது..

மொட்டு மில்லி மீட்டர் மில்லி மீட்டராய் வளர்ந்து கொண்டிருந்தது. காப்பியின் ருசியும் கூடிக்கொண்டே போனது.

அன்று ஞாயிற்றுக் கிழமை. அவள் குழந்தையுடன் முதல்நாள் அம்மா வீட்டிற்குப் போயிருந்தாள். சாவதானமாயெழுந்து முகம் கழுவிக்கொண்டு வாசலுக்கு வந்தான். பளீரென்று ஜொலித்தது பூ. மஞ்சளும் சிவப்பும் சம பரிமாணத்தில் கண் கூசியது. உடம்பு சற்று நடுங்கியது. அருகில் நின்று பார்க்கப் பார்க்கக் கண் குளிர்ந்து வந்தது. வெகுநேரம் நின்றான். பார்த்துக்கொண்டிருக்கும்போது இவனுக்குத் தோன்றியது. ‘இவ்வளவு நேரம் பார்த்தும் செடி கண்ணில் படவில்லை. பூதான் கண்ணுக்குத் தெரிந்தது; கண்ணில் நின்றது. பூவுக்குக் கீழே செடியும், செடிக்குக் கீழே நானும் திடீரென்று காணாமற் போனோம்’. பார்வையைத் திருப்பி உள்ளே போனான்.

சட்டையைப் போட்டுக்கொண்டு சைக்கிளையும் பையையும் எடுத்து வெளியில் வைத்து வீட்டைப் பூட்டினான். மனைவி அம்மா வீட்டிலிருந்து வருகிற நேரம். சாவியை அடுத்த வீட்டில் கொடுத்தான். தஞ்சாவூர் சாலையில் வெள்ளைப் பூச்செடி ஒன்றை ஒரு வாரத்திற்கு முன்பு பார்த்து வைத்திருந்தது ஞாபகத்திற்கு வந்தது. சைக்கிளில் ஏறிப் பறந்தான்.

கனத்த வெயிலில் இவன் பையில் செடியோடும் செடியிருந்த மண்ணோடும் சைக்கிளை விட்டு இறங்கையில் மனைவி கேலி பேசினாள், “அடுத்த விருந்தாளி வந்தாச்சா?”

***(1987)***